# திராவிட நாடு

மலர் 11, இதழ் 10

September 07, 1952

Record no. 1005

*Tirāviṭa nāṭu*

*Malar 11, ital 10*

*September 07, 1952*

Record no. 1005

ஆண்டு சந்தா ரூ. 7. தனிப் பிரதி அணா 2. சிலோன் 15 சதம் REGD. NO 4642

# திராவிடநாடு

மலர் 11. 7—9—52 இதழ் 10

# இருட் குகையில் அருணோதயம்

"கரும்பு இனிக்கும்!"

"பொய்! பொய்!! கரும்பாவது இனிப்பதாவது. கசக்கும். வேப்பங்காய்போல் கசக்கும்"

"பாலும் பருத்தியும் வெள்ளை நிறம்"

"பொய் சொல்லுகிருன். இரண்டும் வெள்ளை நிறமாமே! நிறங்கள், அறியா நிர்மூடனய்யா இவன்!!"

"நற்றமிழ் கவிதை—நலமிக்க செழுமலர்!"

"கவிதை, மலராம்! கற்பனையைக் கூறி மயக்கப்பார்க்கிருன். இப்படியெல்லாம் சொன்னுல், தமிழை, பெருமைப்படுத்திவிட முடியுமோ?"

*

வாதத்திலே, விதண்டாவாதம் என்ருெரு வகையுண்டு! எது சொன்னுலும் மறுக்கவேண்டுமென்பதையே இலட்சியமாகக் கொண்டிருப்பார்கள்! 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள்காண்பதறி'வெனும் கற்கொள்கை அவர்கட்கு கல்ல பாம்பு! தீண்டார், இத்திருக்குறளை. முரட்டுப் பிடிவாதம்! வாட்டுக கூச்சல்!—இரண்டாலும், வாயடைக்க முயலுவர். இரண்டுக்கும், ஆள் அடங்காவிடில், கடுஞ்சொல்லும் தடியடியும் காட்டுவர். தாக்குவர்! கையாலும், பத்திரிகைகள் மூலமாகவும் இத்தகைய திருப்பணியைச் செய்வதில், தேசியத் தோழர்கள் ஈடுபடும் நேரத்திலெல்லாம், நாம் சிந்தைமிக நொந்ததுண்டு. மக்கைக் குணம் நிந்தைக்குரியதென்பதையும் மறந்தனரே! என, எண்ணி அனுதாபம் கொண்டதுண்டு. சங்கைக்கடைக் கூச்சலால் சங்கநாதத்தை ஒடுக்க முயலும் வேலையில் ஈடுபடுவதேனோ இவர்கள், என்று வருந்தியதுண்டு. அப்பப்பா! சாதாரண வார்த்தைகளைக் கொண்டா தாக்கினர்கள்! ஏசினர்கள்!!

"பார்! பார்! வகுப்புத்துவேஷி"

"உலகம் உணரா உன்மத்தன்"

"காலிக் கும்பல்! ஏதோ, கண்டபடி பேசித் திரிகிறது"

"ஆரியமாம்—திராவிடமாம்!"

"திராவிடக் கலாச்சாரமாமே, செப்புகிருர்கள் இத்தெரு சுற்றிகள்"

"தமிழ் — திராவிட மொழியாம். தெலுங்கும், மலையாளமும், கன்னடமும் திராவிட மொழிகளாம்!!"

"கேலிக்கூத்து! சட்டை செய்யாதீர்கள் இந்த சனியன்களை"

இவ்விதம், ஏசிய சொற்களும் வீசிய வார்த்தைகளும் கொஞ்ச நஞ்சமல்ல. "பணிவுடன் அழைக்கிருேம். எமது கூற்றை துணிவுடன் மறுத்திடுங்கள்" என்று, வாதுக் கழைத்தால், வம்பனுடன் நேருக்கு நேர் நிற்பதோ எம் செயல், என்று சுடுசொல் வீசுவர்! எதைச்சொன்னுலும் எள்ளி நகையாடுவர்! நம்மைக் கண்டாலே, 'திராவிடன்! போகிருனப்பா' என்று, பேசிடும், திருக்குழாம் கூட உண்டு. இந்தத் திவ்ய ரூபர்களின், வாதத்தினையே, விதண்டாவாதமென்று குறிப்பிட்டோம். கரும்பு, நாம் உதாரணம் காட்டினுல், கசக்கும்! பால், நாம் தொட்டால் உபமானத்துக்கு, வெள்ளை நிறமென ஒப்பார்! காரணம், நாமல்லவா அதைக் கூறுகிருேம். நாம் கூறி, இவர்கள் ஏற்றுக்கொண்டுவிட்டால் என்ன ஆவது! நாம் கூறலாமா அதை! இவர்கள்தான் ஏற்கலாமா! செச்சே!!—இந்த 'விதண்டாவாத' மனப்போக்கில் விளையாடும் தோழர்கள், இன்னும் இருக்கிருர்களெனுலும் காரணத்தாலேயே, அடிக்கடி, பல உண்மைகளை,

"சொன்னேம்;

சொல்கிருர்கள்!"

என்று குறிப்பிட்டு, வாயேயடைத்து வலர்கவானேம். விதண்டாவாதம், விரண்டோடி, திசை. புதுப் பாதை திரும்புகிறதென்றுல், மகிழவேண்டிய காட்சிதானே! உள்ளத்தைப் பரவசப்படுத்தும் இத்தகைய காட்சிகளை, இப்போது நாம், அடிக்கடி காணும் சந்தர்ப்பம், மலர்ந்து வருகிறது. 'தீண்டினுல், திருநீல கண்டம்' என்று வாய்மூடி, பேசாதிருந்தோரெல்லாம், இப்போது பேசுகிருர்கள். எழுதுகோலைத் தொடாதோரெல்லாம், தொடுகிருர்கள்! தீட்டுகிருர்கள்!! — அவர்கள் தீட்டுவதும், வாய்திறந்து பேசுவதும், நமக்கு அறிவுரை கூறும் வகையினதாக இருந்தாலும், நாம் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைகிருேம். ஒன்று, நம்மைப்பற்றிய கலக்கம் அவர்கள் சிந்தையைக் கொட்டிக் கொண்டிருப்பது! மற்ருென்று, நமது பிரச்சினையை 'தள்ளிவிடக் கூடிய ஒன்று' என்று வேமை உள்ளத்தோடு இருந்த நிலை மாறி, உண்மையை உரைக்கத் தலைப்பட்டிருப்பது.

உள்ளத்தைச் செவிட்டுக் காதாக்கிக் கொண்டிருந்தோர், இப்போது நமது விஷயங்களுக்கும் ஓரிடம் ஒதுக்கவேண்டியவர்களாகி இருக்கிருர்கள். அத்தகைய 'சூழ்நிலை' அருணேதயமாகி இருக்கிறது. அருணேதயம் ஏற்படுவது சாமான்யமா! அதுவும், இருட்டு மனப்பான்மையும், குருட்டுப் பிடிவாதமும், திருட்டுக்குணமும், முரட்டு வேதாந்தமும் கொண்ட குழாத்திடையில், இது இலேசான காரியமா?

"திராவிடம்—திராவிடர்!"

"திராவிட மொழிகள். திராவிட கலாச்சாரம்"

இந்த மொழிகளை, நாம் கூறும் போது, 'சிவ! சிவா!!' என்று காதுகளையும் கண்களையும்மட்டுமல்ல, கருத்துக்களையும் மூடிக்கொண்ட நேரம் கடந்து, 'என்னப்பா இது! ஆரியமாவது, திராவிடமாவது!!' என்று சலிப்போடு புத்திமதி கூறிய கட்டங்கள் தாண்டி, "ஆரியம்-திராவிடம் உண்மைதான். ஆனுல் இதனைக் காட்டுவாபோ?" என்று கேள்விக் கணை பூட்டிய காட்சி மறைந்து "திராவிட கலாச்சாரம் என்று ஒன்று உண்டு" என்று ஒப்புக்கொள்ளக்கூடிய, அருணேதயக் காட்சிகளைக் காண்கிருேம், இன்று.

எவரெவர் கண்டித்தனரோ, அவர்கள் கூறுகிருர்கள்! எட்டுத் தப் பத்திரிகைகள் 'மூடி மறைத்தனவோ' அவைகள் எழுதுகின்றன! சென்னை மாநிலத்தார், 'மித்திரன்' இதழின் குணத்தையும் சுபாவத்தையும் நன்கு அறிவார்கள். அதனை நடத்திவரும் ஆசிரியர் எவரென்பதையும் அறிவோம், நாம். அந்த 'மித்திரன்' இதழில், கடந்த 1-9-52 அன்று கீழ்க்கண்ட விபரங்கள். அச்சாகியுள்ளன:

"குஜராத்தி, வங்காளம், மராத்தி திராவிட மொழிகளான தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் இவற்றிற்குப் பழைய மரபும் வளமும் உள்ள இலக்கியங்கள் உண்டு"

"மற்றெல்லா ராஜ்யங்களையும்விட சென்னையில் கலைச் செல்வங்கள் அதிகம் உண்டு வடமொழி இலக்கியங்கள் தோன்றுவதற்கு வெகு காலத்துக்கு முன்பே தமிழ் சிறப்புடன் தோன்றி வளர்ந்தது"

"திராவிட மொழிகள் ஓர் இனத்தவை"

*

"தென்னிந்தியாவைப் பொறுத்த வரையில், திராவிட மொழியின் பல வடிவங்களேயான தமிழும் தெலுங்கும், மலையாளமும், கன்னடமும், 'தென்னிந்திய அகாடமி' ஒன்றில் அமையவேண்டும்"

"தென்னிந்தியாவுக்குத் தனியாக பிரதேச அகாடமியொன்று இன்றியமையாதது. தென்னிந்திய எழுத்தாளர் ஒருவரை யொருவர் அறிந்து உறவாடவேண்டும் ஒரு பிரதேச மொழியினர் இயற்றும் நூல்களை உடனுக்குடன் மொழி பெயர்த்து சிந்தனைப் பரிவர்த்தனை ஏற்படவேண்டும்"

*

"தமிழும், தெலுங்கும், மலையாளமும், கன்னடமும் திராவிட மொழிகள் என்கிற தோரணையில் ஒருங்கே கூடித் தத்தம் மொழிகளை ஒழுங்குற வளர்க்க தென்னிந்திய அகாடமி உடனே ஏற்படவேண்டும்"

*

திராவிட மொழிகள்.

பழைய மரபும், வளமும் கலைச் செல்வமும் நிறைந்தது.

ஓர் இனத்தவை.

தனியாக அகாடமி தேவை.

கருத்துப் பரிவர்த்தனை, இங்குள்ள எழுத்தாளரிடம் வேண்டும்.

திராவிட மொழிகள் கூட்டுறவு கொண்டு வளரவேண்டும்.

கட்டுரையின் தலைப்பு, "தென்னிந்திய இலக்கிய அகாடமி" என்பதாகும். தீட்டியவர் பி. கோதண்டராமன். கட்டுரை தீட்டிய அன்பர், திராவிட மொழிகளின் வளர்ச்சிக்கும் ஒற்றுமைக்கும் வழிவகைக்கும் வகையில், ஒரு இலக்கியக் கழகம் அமைக்கப்பட வேண்டுமெனவும், அந்த இலக்கியக் கழகம் திராவிட மொழிகளை உறுப்புகளாகக்கொண்டிருக்கவேண்டுமெனவும் வலியுறுத்தி எழுதியுள்ளார். தோழர் ப. கோதண்டராமன், அடிக்கடி சுதேசமித்திரனில், கட்டுரைகள் தீட்டி வருபவர். பட்டம் பெற்றவர். அதுமட்டுமல்ல; [illegible] ஒருவரெனவும் கேள்விப்பட்டிருக்கிறோம். அந்த [illegible], இவ்விதம் எழுதுகிருர்! அதை 'மித்திரன்' இதழ் பிரசுரிக்கிறது!!

தனிப் பண்பாடுகொண்ட திராவிட மொழி எனவும், அந்த நாட்டு மேதைமையைக் காப்பாற்றும் வகையில், இலக்கியக் கழகம் ஏற்படவேண்டுமெனவும், [illegible] கோதண்டராமன் [illegible], வலியுறுத்தப்பட்டுள்ளது.

மொழி ஒரு நாட்டின் புராதனக் கலாச்சாரத்தின் [illegible] என்று உணர்ந்து, தமது ஆசையை, அன்பர் மிகத் தெளிவாகவும் ஆர்வத்துடனும் கூறியுள்ளார். அதை மித்திரன் இதழ் பிரசுரிக்கிறது! இதே கருத்தை கடந்த சில வாரங்களுக்கு முன் 'கல்கி' இதழாரும் தீட்டியிருக்கிறார். அவரது கட்டுரையில் "தென்னிந்தியாவுக்கு ஒரு அகாடமி தேவை" என்று மட்டுமே! எழுதியிருக்கிறார்.

தனி இலக்கியக் கழகம் வேண்டும் — இந்தக் கோரிக்கையை வலியுறுத்தியுள்ள தோழர் கோதண்டராமன் எவ்விதம் கூறுகிருர் தெரியுமா? "பாரதநாடு முழுமையும் பற்பல மொழிகளுக்கும் இலக்கிய கழகங்கள் ஏற்படவேண்டும் எனினும் தென்னிந்தியாவுக்கென திராவிட மொழிகளைக் கொண்ட இலக்கியக் கழகம் ஒன்று தேவை" என்பதாகக் கூறியிருக்கிருர். [illegible] நாம் [illegible] எத்த உண்மையின் எதிரொலி இது, என்பதை நீங்களே உணர்ந்து கொள்ளுங்கள்!! [illegible] கூடியதா? இதே "எனினும்......" என்பதை நாம் கூறியபோதெல்லாம்

(5-ம் பக்கம் பார்க்க)

திராவிடநாடு

காஞ்சி] 7—9—52: [ஞாயிறு

# வெற்றிப் பாதையில்...

★

வெற்றிப் பாதையின் வெளிக்கதவுகள் திறந்து விடப்படுகின்றன! வேகவேகமாக திராவிட முன்னேற்றக் கழகக் கிளைகள் முன்னேறிக் கொண்டுள்ளன! புதுமைத் தாகம் கொண்ட புலிநிகர் காளைகளின் கடமையுள்ளம் காணக்காண மகிழ்கிறோம்!

தலைமைக் கழக தாக்கீதை யொட்டி, கிளைக் கழகத்தேர்தல்கள் நடந்த விபரங்களைத் தாங்கி, குவியும் செய்திகள், தேனைப் பொழிகின்றன. 'தினசரி' இல்லாத நிலையில், அவைகள் அனைத்தையும் உடனேபிரசுரிக்க இயலவில்லை. எனினும், ஓரளவு வெளியிட்டு வருகிறோம். ஜனநாயகத்தின் புது ஒளியில் பூரித்துஎழும்பும் இந்தக்கிளைக் கழகங்களைக் காண எவர் தான் மகிழாமலிருக்கமுடியும்? வசதிகள் இல்லாத 'குழந்தை'; ஆனாலும் வளர்கிறது!! வாகை சூடிய வண்ணமே வளர்கிறது!!

புது நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்கும் அனுமதி, இன்னும் மூன்று மாவட்டங்களுக்கு, தலைமை நிலையத்தால் தரப்படவில்லையெனவும் அறிகிறோம். அந்த மாவட்டங்களின் பணிப் பெருமையும் தெரிந்துவிட்டால், இன்னும் பலப்பல சிந்தையள்ளும் காட்சிகளைக் கண்டு மகிழலாம், நாம்! உரிமைச் சோலையில் பூத்த மலரென விளங்கும் கிளைக் கழகங்களின் செயல் வீரர்களின் பட்டியல், பாராட்டக்கூடிய ஒன்று. வாழ்க்கையின் வசந்த காலக் கொழுந்துகள் எனக் கூறப்படும் வாலிபப் பட்டாளம்தான், எங்கு சென்றாலும், அணிவகுத்து நிற்கிறது! திருச்சியில் கடந்தவாரம் எல்லோரையும் அணி வகுத்துப் பார்க்கும் காட்சி காணக் கிடைத்தது. சகோதரப்பாசத்தோடு, அன்புள்ளத்தோடு, எங்கு சென்றாலும் காணக் கிடைக்கும் அந்த 'பெறற்கரிய காட்சி'யினை எங்கே காணமுடியும், நமது கழகத்திலன்றி! குடும்பப் பாசம், "நாம் எல்லாம் ஒரே குடும்பம்" எனும் ஆர்வ எண்ணம், நமது தாயகத்தை மீட்டிடவேண்டுமென்னும் வேகம், கொந்தளிக்கும் இதய பிம்பங்கள் நமது செயல் வீரர்கள்! அவர்களையெல்லாம் வாழ்த்துகிறோம். கடமையுள்ளத்தோடு, கழகங்கள் ஒவ்வொன்றினையும், கற்கோட்டையாக்கிடவேண்டுமென அறிவுறுத்துகிறோம். நாம் எதிர்பார்க்க வேண்டிய பேரிடிகள் ஏராளம்—ஏனெனில், நாம் எதிர்த்துநிற்கும் வடநாட்டு ஏகாதிபத்யம் சாதாரணமானதல்ல. எதிரியை வீழ்த்தி, புது நாடு அமைக்க விரும்பும் நமக்கு எவரும் துணையில்லை, இந்தப் பூமியில்—நமது குடும்பத்தாரைத் தவிர. இந்த நிலையை, நாம் ஒவ்வொருவரும், கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

துணையில்லாதோர், வசதியற்றோர், நாம். ஆனால் கடமையுள்ளம், ஆர்வ உள்ளம் கொண்டோர் நாம். நம்மையே 'நம்பியிருக்கிறோம்—நமது தியாகங்கள்தான் வெற்றியைச் சுமந்து வரவேண்டும். அது மட்டுமல்ல, இருட்டுப் பாதையில் தள்ளப்பட்டுக் கிடக்கும் நமது சகோதரர்களையும் திரட்டவேண்டும். ஆத்திரம், அருவருப்பு, கேலி, எதுவும் இல்லாமல் அனைவரையும் சேர்க்கவேண்டும். கண்ணியம்—சகிப்புத் தன்மை—அன்பு, இவைதான் நம்முடைய இலட்சியச் சொற்கள். ஒருவர், இருவராகிவிட்டாலே 'பிரச்சினை' வந்து விடுகிறது பல்கோடி மக்களிடையில் பழகவேண்டிய நாம், எவ்வளவோ, பிரச்னைகளை எதிர்நோக்கவேண்டும். அவைகளைத் தாண்டிச் செல்ல, ஆத்திரம் கூடாது—அனைவரையும் நம் அணிவகுப்பிலே சேர்க்கவேண்டும். நாம் எவருக்கும் விரோதிகளல்ல! பழைமைக்கும் ஏழ்மைக்கும்தான் நாம எதிரிகள். இந்த இரண்டினையும் வீழ்த்தி நமது மாநிலத்தை சமதர்மச் சோலையாக்கும் பணி, எளிதில் முடியக்கூடிய காரியமல்ல. இதனை எண்ணத்தில் கொண்டு பணியாற்றுமாறு புதிதாகப் பொறுப்பேற்கும் எல்லா செயல் வீரர்களுக்கும் தெரிவித்துக் கொள்கிறோம். கம்பீரமாகப் பறக்கும் நமது கொடி சுதந்திர திராவிடத்தின்மீது பறக்கும் நாளை நோக்கி வேகமாகச் செல்வோம்!

—

## அனுதாஸ்ரமம்

★

மாவட்டத்துக்கு ஒன்று வீதம் அனுதாஸ்ரமங்களை அமைப்பது என, இந்துமத பரிபாலன போர்டார், தீர்மானம் செய்திருப்பதாக அறிய வருகிறோம் திக்கற்று அலையும் சிறுகுழந்தைகளுக்கு எட்டாவது வரையில் படிப்பும் ஏதாவது ஒரு தொழிலும், இந்த அனுதாஸ்ரமங்களிலகற்றுத்தந்து வெளியில் அனுப்பப்படும் எனபதாக மேற்படி போர்டின் கமிஷனரான டி. எம் சின்னையாபிள்ளை தெரிவித்துள்ளார். காலப் புயலின் கடூரத்துக்கு, பழைமை தலைசாய்க்கிறது என்பதைக் காட்டும். இத்தகவலை அறிய மிகவும் மகிழ்கிறோம்! இந்த அனுதாஸ்ரமங்களின் நிர்வாகச் செலவு, கோயில்கள் மூலம் வரும் வருமானத்தைக் கொண்டு நடத்தப்படுமாம். காலங்கடந்த முடிவு! எனினும், இப்போதாவது. உதித்த மைக்கு, நமது பாராட்டுதல். சென்னை மாநிலத்தை எடுத்துக் கொண்டால், கோயில்களில் குவிந்திருக்கும் செல்வமும், ஆண்டு தோறும் குவியும் காணிக்கையும் எத்தனையோ கோடிகளாகும். இவை யனைத்தும், வீண் செலவுகளுக்கும், எங்காவது சில இடங்களில் வேதாகம பாடசாலைகளுக்குமே செலவழிக்கப்பட்டு வந்தன. இந்துமத பரிபாலன போர்டுக்கு கட்டுப்பட்டு சென்னை மாநிலத்தில் சுமார் 26,000 தர்ம ஸ்தாபனங்கள் இருக்கின்றன- இவைகளில் வருமானம் வரக்கூடிய இடங்கள் எவை யெவை யென்று பார்த்தால், இதயம் குலுங்தும்! திருப்பதி ஏழுமலையானுக்கு ஆண்டு தோறும் மக்கள் செலுத்தும் காணிக்கை ஒரு இலட்சமல்ல இரண்டு லட்சமல்ல முப்பது.இலட்ச ரூபாய்கள்! பழனியாண்டவனுக்கு வரும் வருமானம் மூன்று லட்சம்! திருச்செந்தூரானுக்கு ஐந்து லட்சம்! மதுரை மீனாட்சியின் வருட வருமானமும், திரவரங்கத்தானிடம் சேரும் தொகையும் கிட்டத்தட்ட பத்துலட்சம்! ஆண்டு தோறும் ஒருலட்சம் வருமானம் வரக்கூடிய வகையில் இருக்கும் கோயில்களின் எண்ணிக்கை சுமார் 50 இருக்கலாம்! இவ்விதம் 'உலகை ரட்சிக்கும் மகானுபாவனிடம்'சேரும், லட்சங்களை, இதுநாள் வரையில்கோயிற்பெருச்சாளிகளும் வாணவேடிக்கைகளுமே, ஏப்பமிட்டு வருகின்றன. இந்த உண்மைகளை ஆயுரமாயிரம்பொதுக்கூட்டங்களில் நாம் எடுத்துக் கூறி வந்துள்ளோம். ஆனால், அதெல்லாம் 'நாஸ்திகப் பிரசாரம்' என்று திருவடியார்களால் செப்பப்பட்டது! அம்மையப்பனிடம் இருக்கும் செல்வத்தை, அவனது குழந்தைகளுக்குப் பகிர்ந்திட்டால் என்ன என்று கேட்டோம்—சிறினோர்கள்! ஆனால், இப்போது வளர்ந்து வரும் புதுமைப் புயலின் வேகத்தைக் கண்டு, தமது பிடிவாதத்தைத் தளர்த்தி யிருக்கிறார்கள். கோயிலில் குவிந்து கிடக்கும் செல்வத்தைக் கொண்டு, எவ்வளவோ நன்மைகளைச் செய்யமுடியும்! ஏழைகள் வயிற்றையும், உள்ளத்தையும் குளிரவைக்கமுடியும். அத்தகைய திட்டங்களை, கோயிற் பரிபாலனத்தார் தீட்டவேண்டும். பகவான் ஒன்றும் கோபிக்கமாட்டார்! 'நமது பக்தர்கட்கு இப்போதுதான் புத்தி வந்தது!' என்று பூரிக்கத்தான் செய்வார்! ஆகவே, துணிந்து கோயிலுக்குள் குவியும் பணத்தைக்கொண்டு நாட்டைச் சோலையாக்கும் நற்பணிகளைச் செய்யுமாறு கோருகிறோம். அப்படி செலவழிக்கும்போது. ஐயன் வந்தோ அல்லது அம்மை தோன்றியோ, 'என் சொத்தை எப்படியடா எடுக்கலாம்' என்று கேட்டால் நாம் பார்த்துக்கொள்ளலாம்! ஆகவே, பல நன்மைகளைச் செய்ய முன்வர வேண்டுமென போர்டாரைக் கேட்டுக்கொள்கிறோம்.

அனுதாஸ்ரமங்களை அமைக்கும் முயற்சி ஏட்டளவில் நின்று விடாமல், வேதபாடசாலைகளாக உருவெடுத்து விடாமல், அறிவுக் கோயில்களாக விளங்கும் வகையில் ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென விரும்புகிறோம். ஏட்டுக் கணக்கையும், 'லாபம் உண்டா?' என்ற கேள்வியையும் எழுப்பும் இடமாக இருந்த கோயில் பரிபாலனத்தாரின் இதயத்தில் எழுந்த இந்த நல்லெண்ணத்துக்கு நமது நன்றி.

★

## மந்திரி—வியாபாரி!

"சிறிது விலை யுயர்த்தி விற்றாலும் வியாபாரிகளுக்குக் கடுமையான தண்டனை அளிக்கப்படுகிறது. இதைப்பற்றிக் குறை கூறினீர்கள். தண்டனை தருவதை நானும் விரும்பவில்லை. வியாபாரிகளை குற்றவாளிகள்போலவா நடத்துவது?"

*

சென்னை வியாபாரச் சங்கத்தார் தந்த விருந்துக்குப் பின் பேசிய டில்லி வியாபார மந்திரி கிருஷ்ணமாசாரி இவ்விதம் வெளியிட்டிருக்கிறார். விலை உயர்த்தி விற்கும் வியாபாரிகளுக்குத் தண்டனை தருவது பிடிக்கவில்லையாம், அவருக்கு! பழைய வியாபாரத் தோரணையிலேயே பேசியிருக்கிறார்! 'விலை உயர்த்தி விற்கும் எவரையும் தூக்கு மேடையில் தொங்கவிடுவேன்' என கர்ஜித்தார், பண்டித நேரு. அவரது மந்திரி சபையில், இவரும் ஒரு அமைச்சர்: ஆனாலும் இவ்விதம் பேசுகிறார். திருடனிடம் பெட்டிச் சாவியைக் கொடுத்தால் என்ன ஆகும் என்பது தெளிவாகவிளங்குகிறதென்கிறீர்களா! என்ன செய்வது? இப்படியெல்லாம் ஆகிவிட்டது, காங்கிரசின் கதி!!

★

> **கழக வெளியீடுகள்**
>
> | | |
> |---|---|
> | தீர்மானங்கள் | 0—1—0 |
> | சட்டதிட்டம் | 0—2—0 |
>
> விபரங்களுக்கு:
>
> தி. மு. க. : : ராயபுரம்
>
> தலைமைநிலையம் சென்னை 13.

## இரு 'ஆச்சாரி'கள்!

"கைத்தறி நெசவாளர்கள் உற்பத்தி செய்வதற்கென்று சில ரக ஜவுளிகளைப் பிரத்யேகமாக ஒதுக்கிவிடவேண்டும். மில்கள், பிரஸ்தாப (வேஷ்டி, புடவைபோன்ற) ரக ஜவுளிகளை உற்பத்திசெய்யக்கூடாது என்றும் நான் அபிப்பிராயப்படுகிறேன்"

—இவ்விதம், சட்டசபையில் சென்னை மாநில முதலமைச்சர் ஆச்சாரியார் அறிவித்தார். சென்னையில் நடைபெற்ற பொதுக்கூட்டம் ஒன்றில் பேசும்போது, மேற்படி கருத்தை, மத்ய சர்க்காருக்கு சிபார்சு செய்திருப்பதாகவும் அறிவித்தார். கைத்தறிக்கு கிராக்கி ஏற்படச்செய்யும் நோக்கத்துடனேயே இந்தச் சிபார்சைத் தாம் செய்யப்போவதாகத் தெரிவித்தார். இன்று கைத்தறியாளர் படும் அவதி, ஒரு நீண்ட சோகத் தொடர் கதை! அவர்கள் எந்தெந்த ரகங்களை உற்பத்தி செய்யமுடியுமோ, அவை எல்லாவற்றையும் ஆலைகளே எடுத்துக்கொண்டிருக்கின்றன. ஆலையரசர்களுடன், ஏழை கைத்தறிக்காரர்கள் போட்டியிட முடியவில்லை! கைத்தறித் துணியைவிட, ஆலைத் துணி விலை சரசமாகக் கிடைக்கிறதே எனக் கூறலாம். அதற்காக, ஆண்டாண்டு காலமாகவும், பல கோடிக்கணக்கான மக்களின் வாழ்க்கைத் தொழிலாகவும் அமைந்துவிட்ட நெசவுத் தொழில் க்ஷீணிக்கும்படியாகச் செய்வதென்பது, வேண்டுமென்றே செய்யப்படும் படுகொலையாகும்! இதனால்தான், நெசவுத் தொழிலுக்கு என்று ஒரு சில ரகம் ஒதுக்கிவிடப்படவேண்டுமென, கடந்த சில ஆண்டுகளாக, நெசவாளர்கள் கோரிவருகின்றனர். அந்தக் கோரிக்கையைத்தான் ஏற்றுக்கொள்வதாகவும் ஆசசாரியார் தெரிவித்தார். ஆனால் செப் 1-ல் சென்னை வந்த மத்ய சர்க்கார் மந்திரி, என்ன கூறுகிறார் தெரியுமா?

"கைத்தறிகளுக்கே சேலை, வேஷ்டி உற்பத்தியை ஒதுக்கிவிடவேண்டுமென்பது சரியல்ல. இப்படிச் செய்தால் சீக்கிரத்திலேயே நிர்வாண இயக்கம் ஆரம்பிக்க வேண்டியதுதான்"

இது, டி. டி. கிருஷ்ணமாச்சாரியாரின் கூற்று! ஒரு ஆச்சாரியார், சிபார்சு செய்தேன் என்றார். மற்றோர் ஆச்சாரியார், "பைத்தியக்காரத்தனமான" யோசனை என்கிறார்! இந்தக் கோரிக்கையை, பல்லாண்டுகளாக, வலியுறுத்தி வருவதோ நமது கைத்தறித் தொழிலாளர்கள். ஆச்சாரியார், மறுத்துப்பேசுகிறார்!! இரண்டு ஆச்சாரியார்களுக்குஇடையிலும், நமது சகோதரர்கள், வாடுகிறார்கள்—வதைகிறார்கள் — பிணமாகிக் கொண்டிருக்கிறார்கள். ஆச்சாரியார்களுக்கென்ன, ஒருவருக்கு 'ஜாலரா' கட்டையும் 'பஜகோவிந்தமும்' இருக்கிறது! மற்றொருவருக்கு 'வெள்ளைக்காரன் கம்பெனி' இருக்கிறது! வாடுவோருக்கென்ன இருக்கிறது, கண்களில் நீரும், பிணமானால் சுடுகாடும் தவிர!!!

## தி. மு. க. 3-வது ஆண்டு மலர்

21—9—52ல் தி. மு. க. மூன்றாவது ஆண்டு மலராக இதழ் வெளிவருகிறது.

மூவர்ண முகப்பு அட்டையுடன், அருமையான கட்டுரைகள், கதைகள் பலவும் மலரில் இடம்பெறுகின்றன.

முன்பணம் அனுப்பாதவர்களுக்கு மலர் கிடையாது.

நிர்வாகி



# திராவிட முன்னேற்றக் கழகக் கிளைகளின் ★ புது நிர்வாகிகள் ★

## திருச்சி மாவட்டம்

**மணப்பாரை**

செய: ச. சமுத்திரபாண்டியன், து. செய: எ. எஸ். கணபதி, பொரு: எஸ். சங்கரன், வி. உறு: குமரவேலன், சக்கரபாணி, மாவட்டப்பிரதிநிதி: எ. எஸ். கணபதி, கோதண்டராமன், செயற் குழுவினர்: 13 பேர்.

**புதூர்-உத்தமனூர்**

செய: வ. வெ. தங்கராசு, து: செயலாளர்: சா. து. பொன்னுசாமி, பொருளாளர்: மு. நாதப்புடையார், விளம்பர உறுப்பினர்: மோ. த. முத்துசாமி, செயற் குழுவினர்: 14 பேர்.

**காட்டுபுத்தூர்**

செயகா: கே. எ. இராசமாணிக்கம், துணைச் செயலாளர்: கே. என். கோவிந்தராசன், மணியகார், பொருளாளர்: கே. கந்தசாமி, மாவட்டப் பிரதிநிதி, கே. என். கோவிந்தராசன், செயற் குழுவினர்: 17 பேர்.

**தவுட்டுப்பாளையம்**

செயலாளர்: டி. பி. மூர்த்தி, துணை செயலாளர்: பி. மாரியப்பன், பொருளாளர்: சி. காதர் பாட்சா, மாவட்டப் பிரதிநிதி: டி. பி. மூர்த்தி, செயற் குழுவினர்: 7 பேர்.

**புகளூர்**

செயலாளர்: டி. ஆர். முத்துசாமி, துணைச் செயலாளர்: என். பி. சாமி, பொருளாளர்: எஸ். கே. சாமியப்பன், மாவட்டப் பிரதிநிதி: எஸ். கே. சாமியப்பன், செயற் குழுவினர்: விபரம் இல்லை.

**கோட்டாத்தூர்**

செயலாளர்: தெ. ஜெகநாதன், துணைச் செயலாளர்: வெ. சேவகன், பொருளாளர்: மா. வெ. ரங்கசாமி, மாவட்டப் பிரதிநிதி: அ. அருணசலம், செயற் குழுவினர் 8 பேர்.

**வெள்ளனூர்**

செயலாளர்: வெ. ந. தீந்தமிழ்ச் செல்வன், துணைச் செயலாளர்: இரா. நடராசன், பொருளாளர்: சோ. இராசகோபால், மாவட்டப் பிரதிநிதி: ம. முருகேசன், செயற் குழுவினர் 5 பேர்.

**திருமானூர்**

செயலாளர்: டி. எம். சுப்பிரமணியம், துணைச் செயலாளர்: எஸ். மருதநாயகம், பொருளாளர்: எம். மாரியப்பன், மாவட்டப் பிரதிநிதி: டி. எம். சுப்பிரமணியம், எஸ். மருதநாயகம், செயற் குழுவினர் 6 பேர்.

**ஒக்கரை**

செயலாளர்: பி. இராமலிங்கம். துணைச் செயலாளர்: எஸ். ராசு, பொருளாளர்: எஸ். பி. நடேசன், மாவட்டப் பிரதிநிதி: ஆர். சின்னசாமி, எஸ். பி. நடேசன், செயற் குழுவினர்: 13 பேர்.

**தாரநல்லூர்**

செயலாளர்: எஸ். சுப்பிரமணியம், துணைச் செயலாளர்: ஆ. தங்கராசன், பொருளாளர்: என். கோவிந்தன்: விளம்பர உறுப்பினர்: மோகன், மாவட்டக் குழு: சுப்பிரமணியம். மோகன்.

**அரியலூர்**

செயலாளர்: மு. மாரிமுத்து, துணைச் செயலாளர்: மு. மருதமுத்து, பொருளாளர்: ரா. சின்னையன், மாவட்டப்பிரதிநிதி: எத்திராஜுலு, எம். என், சாமி, செயற் குழுவினர். விபரம் இல்லை.

**மேலக்கற்கண்டார் கோட்டை**

செயலாளர்: சி. காளிமுத்து, துணைச் செயலாளர்: எ. சம்சுதீன், பொருளாளர்: எம். நம்பிக்கைராஜ், மாவட்டப் பிரதிநிதி: மு. மாணிக்கம், செயற் குழுவினர்: 16 பேர்.

**கீரனூர்**

செயலாளர்: இ. க. பழனிச்சாமி, துணைச் செயலாளர்: உ. சி. பிரகாசம், பொருளாளர்: ச. அப்துல் மஜீது, விளம்பர உறுப்பினர்: சோன், மாவட்டப் பிரதிநிதி: மு. அ. முகம்மது, செயற் குழுவினர்: 6 பேர்.

**கீழப்பழுவூர்**

செயலாளர்: உ. தங்கவேல், துணைச் செயலாளர்: கி. நாகராசன், பொருளாளர்: ச. இரத்தினம், விளம்பர உறுப்பினர்: க. சீனிவாசன், மாவட்டப் பிரதிநிதி: பா. ராமுடு, செயற் குழுவினர் 11 பேர்,

**புதுக்கோட்டை**

செயலாளர்: தி. மகேந்திரன், துணைச் செயலாளர்: இரா. கணபதி, பொருளாளர்: ஆர். பழனிவேலு, விளம்பர உறுப்பினர்: ச. கு. சங்கரலிங்கம், மாவட்டப் பிரதிநிதி, தி. மகேந்திரன், க. ஞானமுத்து.

## நெல்லை மாவட்டம்

**தூத்துக்குடி**

செயலாளர்: எஸ். நடராசன், பொருளாளர்: வானமாமலை, விளம்பர உறுப்பினர்: கே. தாளமுத்து, மாவட்டப் பிரதிநிதி: ஆர். எஸ். தங்கப்பழம், எம். எஸ். சிவசாமி.

**எட்டையாபுரம்**

செயலாளர்: மு. நடராசன், துணைச் செயலாளர்: வெ. சுப்பிரமணியம், பொருளாளர்: மு. பேச்சியப்பன், மாவட்டப் பிரதிநிதி: எஸ். கலிங்கன்.

**வேப்போடை**

செயலாளர்: சின்னகண்ணு, (மற்ற விபரம் இல்லை) மாவட்டப் பிரதிநிதி: வி. எல். பொன்னுசாமி.

**தென்காசி**

செயலாளர்: எம். எஸ். சுந்தரம், துணைச்செயலாளர்: எ. வி. மகம்மது, பொருளாளர்: வி. எம். அகம்மதுசா, விளம்பர உறுப்பினர்: அகத்தியன், மாவட்டப் பிரதிநிதி: எ. வி. மக்துப், அகம்மதுசா.

**செங்கோட்டை**

செயலாளர்: க. சட்டநாதன், துணைச் செயலாளர்: எல். சீதாராமன், பொருளாளர்: உலகநாதன், மாவட்டப் பிரதிநிதி: உலகநாதன், சிவராமன்.

**கல்லிடைக்குறிச்சி**

செயலாளர்: கே. எஸ். சுப்பிரமணியம், துணைச் செயலாளர்: வி. எம். ரங்கசாமி, பொருள் உறுப்பினர்: கே. சங்கரன், மாவட்டப் பிரதிநிதி: கே. சுப்பிரமணியம்.

**முக்கூடல்**

செயலாளர்: இளந்தமிழன், துணைச் செயலாளர்: காசிமணி, பொருளாளர்: தசரதராம், விளம்பர உறுப்பினர்: சங்கரன், மாவட்டப் பிரதிநிதி: முத்துக்குட்டி.

**கருங்குளம்**

செயலாளர்: அ. சிதம்பரனார், துணைச் செயலாளர்: மதியரசு, பொருளாளர்: சண்முகசுந்தரம், மாவட்டப் பிரதிநிதி: வளர்பிறை.

**கீழஏரல்**

செயலாளர்: ப. சி. சாமியா, துணைச் செயலாளர்: த. சி. சாமியா, பொருளாளர்: ச. பொன்னப்பன், மாவட்டப் பிரதிநிதி: பெ. ரா. சின்னசாமி.

**புல்லூக்காட்டுவரிசை**

செயலாளர்: கே. சீனி, துணை செயலாளர்: ஆர். கண்ணன், பொருளாளர்: மா. சண்முகம், விளம்பர உறுப்பினர்: திராவிடதுரை, மாவட்டப் பிரதிநிதி: மாரியப்பா.

**கரிவலம்வந்தநல்லூர்**

செயலாளர்: சி. எஸ். பிச்சையா, துணை செயலாளர்:ஆ ராமசாமி, பொருளாளர்: பொன்னையா, விளம்பர உறுப்பினர்: வி. சாமி, மாவட்டப் பிரதிநிதி: கா. கருப்பையா.

**பத்தமடை**

செயலாளர்: ந. பரமசிவம், துணைச்செயலாளர்: அய்யாக்குட்டி, பொருளாளர், பக்கீர், விளம்பர உறுப்பினர்: பக்கீர் பாவா.

## கோவை மாவட்டம்

**மேட்டுப்பாளையம்**

செய: ப. கிருஷ்ணசாமி, துணை: தி. பாட்டையன், பொரு: ஆ. நாராயணசாமி, மாவட்டப்: எம். பி. முத்துசாமி. செயற்குழுவினர், 9-பேர்.

**ஊஞ்சலூர்**

செய: மு. கதிரழகன், துணை. வா. போ. குமாரசாமி, பொருள்: வா. கு. சாமியப்பன், மாவட்டப் யூ. கே. ஆறுமுகம். செயற்குழுவினர் 13-பேர்.

**குனியமுத்தூர்**

செய: கே. எ. பி. முத்து, துணை: கு. ஆ. அய்யாசாமி, பொருள்: தங்கமாணிக்கம், மாவட்டப்: கே. பி. பி. முத்து. செயற்குழுவினர்: 7-பேர்.

**கணியூர்**

செய: கே. எ. முருகேசன், துணை: எம். வேலுச்சாமி பொருள்: கே. கோபால்சாமி, மாவட்டப்: கே. எ. முருகேசன். செயற்குழுவினர்: 10-பேர்.

**வேட்டைக்காரன் புதூர்**

செய: மீ. சி. ராஜன், துணை: குருப்புசாமி, பொரு: வே. அ. முத்துமாணிக்கம் மாவட்டப்: வி. எம். தம்பி, செயற்குழுவினர்: 14-பேர்.

**அங்கலக்குறிச்சி**

செய: எ. எம். இப்ராகிம், துணை: எ. சி. மயில்சாமி, பொரு: எ. எம். காளிமுத்து, மாவட்டப்: இப்ராகிம், மயில்சாமி. செயற்குழுவினர்: 11-பேர்.

**வெள்ளார்**

செய: சி. கோபால், துணை: கே. சி. மருதாசலம், பொருள்: ஆர். கிருஷ்ணசாமி, வி. உறுப்:கே. என். ஆறுமுகம், மாவட்டப்: எம். ரங்கசாமி. செயற்குழுவினர் 5-பேர்.

**பனைமரத்துப்பாளையம்**

செய: ப. சா. மௌனன், துணை: வி. நா. சின்னசாமி, பொரு: நா. நாரணன், மாவட்டப்: ப. நா. ராமசாமி செயற்குழுவினர். 7-பேர்.

## தஞ்சை மாவட்டம்

**பட்டமங்கலம்**

செய: இரா. திரைராசு, துணை: சி. தங்கவேலு பொருள்: சி. வடிவேலு, மாவட்டப்: மு. ராமசாமி, செயற்குழுவினர்: 12-பேர்.

**வலங்கைமான்**

செய: எ. கோவிந்தராசன், துணை: என். சாமிநாதன், பொருள்: சு. சிலைராமன், மாவட்டப்: வி. பி. உத்தமன். செயற்குழுவினர்: 7-பேர்.

**திருப்பூண்டி**

செய: எஸ். விஸ்வநாதன், துணை: கே. தர்மலிங்கம், பொருள்: கு. நடராசன், மாவட்டப்: என். வீராசாமி, எம். வைத்திலிங்கம். செயற்குழுவினர். 7-பேர்.

**கீழ்வேளூர்**

செய: கோ. மாரியப்பா, துணை: அன்புமுகம், பொருள்: மு. முத்து, மாவட்டப்: கோ. மாரியப்பா,அன்புமுகம். செயற்குழுவினர்: 14-பேர்.

**இராசாமடம்**

செய: ஆர். அந்தோனிசாமி, துணை: என். கோதண்டபாணி, பொருள்: ஆர். கே. துரைக்கண்ணு மாவட்டப்: ஆர். வீரையன் செயற்குழுவினர்: 8-பேர்.

**முத்துப்பேட்டை**

செய: அகு, மு. கணபதி, துணை, இரா. நடராசன், பொருள்: வ. ராமநாதன், மாவட்டப்: தி. ரா. சிவசங்கரன். செயற்குழுவினர் 7-பேர்.

**மதுக்கூர்**

செய: ஆர். வி. எஸ். மணி, துணை: எம். எஸ். உசேன், பொருள், டி. சின்னப்பா, மாவட்டப்: ஆர். எ. ராமசாமி, வி. பழனிச்சாமி. செயற்குழுவினர்: 16-பேர்.

**திருச்சனம்பூண்டி**

செய: கோ. இராமசாமி, துணை: தா. சுப்ரமணியன், பொருள்: ம. சாமியப்பா, மாவட்டப்: இரா. அப்பாவு. செயற்குழுவினர். 15-பேர்

**நாகப்பட்டினம்**

செய: கே. பாப்பையன், துணை: ஜி. ராதாமணாளன், பொருள்; கோ. பக்கிரிசாமி, மாவட்டப்: கே. பாப்பையன், என். பி. திருப்பதிசாமி. செயற்குழுவினர்: 12-பேர்.

**நெடும்பலம்**

செய: டி. எஸ். கல்யாணசுந்தரம், துணை: க. வைத்தியலிங்கம். பொருள்: பி. கோபாலகிருஷ்ணன், மாவட்டப்: செ. தங்கவேல், செயற்குழுவினர். 7-பேர்.

**மன்னார்குடி**

செய: இரா. கணேசன், துணை: கு. விஸ்வலிங்கம், பொருள்: வி. சிவராஜ், மாவட்டப்: ப. நாரணசாமி. செயற்குழுவினர்: 13-பேர்.

**நாகூர்**

செய: எஸ். வி. சபாபதி, துணை: ஆர். முருகையா, பொருள்: எஸ். ரங்கராஜ், மாவட்டப்: எஸ். வி. சபாபதி. செயற்குழுவினர்: 10-பேர்.

**திருத்துறைப்பூண்டி**

செய: கு. சேக்குடசேன். துணை: கோ. பெருமாள். பொருள், இரா செல்லதுரை. மாவட்டப்: வை சுப்ரமணியன். செயற்குழுவினர். 11-பேர்.

**திருவாரூர்**

செய: டாக்டர் இரா. விசயராகவன், துணை: மு. க. மொய்தீன் பிச்சை, பொருள்: கே. எம். ஜமால் மாவட்டப்: சே. பெ. சேதுபதி. செயற்குழுவினர்: 10-பேர்.

**மாயவரம்**

செய: வை. மாணிக்கம், துணை: என். இட்டப்பா. பொருள்: ஆர். பழனிச்சாமி, மாவட்டப், ஆர். பழனிச்சாமி, ஆ. ராமமிர்த்தம்மையார்.

**கொத்தமங்கலம்**

செய: எஸ். எம். மணி, துணை: பி. டி. சாமி, பொருள்: வி. எம். ஆறுமுகம், மாவட்டப்: எஸ். எம். மணி. செயற்குழுவினர்: 8-பேர்.

## இராமநாதபுரம் மாவட்டம்

**ராசசிங்கமங்கலம்**

செயலாளர்: நவமார்க்கண்டேயன், துணைச்செயலாளர்: சா-தமிழ்பித்தன், பொருளாளர்: சையத் முகம்மது, மாவட்டம்: நவமார்க் கண்டேயன், செயற் குழுவினர், 11 பேர்.

**காரைக்குடி**

செயலாளர்: மு. க. கருப்பசாமி, துணைச்செயலாளர்: சிவநேசபாண்டியன், பொருளாளர்: அ. சுப்பு, மாவட்டப் பிரதிநிதிகள்: க. வே. சத்தியவான், செயற்குழுவினர்: 21 பேர்.

**தேவகோட்டை**

செயலாளர்: இராம. வெள்ளையன், துணைச் செயலாளர்: குரு. இதயமணி, பொருளாளர்: ராம. முத்துவேலன், மாவட்டப் பிரதிநிதிகள்: இராம. வெள்ளையன், இராம. முத்துவேலன், செயற்குழுவினர் 11 பேர்.

**போட்டம்பட்டி**

செயலாளர்: வெ. தங்கேசு, துணைச் செயலாளர்: பா. தங்கராஜ், பொருளாளர்: த. முத்துரத்தினம், மாவட்டப் பிரதிநிதிகள்: சின்னசாமி, க. இராமசாமி. செயற்குழுவினர் 11 பேர்.

**அபிராமம்**

செயலாளர்: இல. மு. சாமி, துணைச் செயலாளர்: எஸ். எம். முகம்மது யாசின், பொருளாளர்: ஓ. எஸ். பாட்சா, மாவட்டப் பிரதிநிதி: கே. சத்தியவாசன், செயற்குழுவினர் 17 பேர்.

**கிருஷ்ணுபுரம்**

செயலாளர்: இ. சண்முகம், துணைச் செயலாளர்: இ. சங்கரபாண்டியன், பொருளாளர்: எரிச்சி, மாவட்டப் பிரதிநிதி: எம். எஸ். இராமசாமி.

**மானுமதுரை**

செயலாளர்: கி. பானுச்சாமி, துணைச் செயலாளர்: எஸ். கே. செல்வம், பொருளாளர்: அ. சேது, மாவட்டப்பிரதிநிதி: து. வ. இராமநாதன், செயற்குழுவினர் 11 பேர்.

**திருச்சுழி**

செயலாளர்: ஆ. முருகேசபாண்டியன், துணைச்செயலாளர்: த.கருமலை பொருளாளர்: சிவ. சுப்பையா, மாவட்டப்பிரதிநிதி: ஆ. முருகேசபாண்டியன், செயற்குழுவினர் 7 பேர்.

## மதுரை மாவட்டம்

**சித்தையன் கோட்டை**

செயலாளர்: என். பி. நாச்சியப்பன், துணைச் செயலாளர்: கே. சாகுல்அமீது, பொருளாளர்: கே. கே. துரை, மாவட்டப் பிரதிநிதி: எஸ். எம். காசிம், செயற்குழுவினர் 11 பேர்.

**ஒத்தக்கடை**

செயலாளர்: திருமாலழகு, துணைச் செயலாளர்: பா. பாப்பான், பொருளாளர்: ஆ. கருப்பண்ணன், மாவட்டப்பிரதிநிதி; எஸ். ஏழுமலை.

**அ. புதூர் (அய்யம்பாளையம்)**

செயலாளர்: சி. பெரியசாமி, துணைச் செயலாளர்: வீரண்ணன், பொருளாளர்: சுப்பிரமணியன், மாவட்டப்பிரதிநிதி: சி-பெரியசாமி, செயற்குழுவினர் 8 பேர்.

**டி. வாடிப்பட்டி**

செயலாளர்: மைனர் வெங்கடசாமி, துணைச் செயலாளர்: ஆர். கோவிந்தன், பொருளாளர்: ஆர். கே. சீதாராம், மாவட்டப் பிரதிநிதிகள்: பி. ராஜாமணி, பழனிவேல்.

**க, உசிலம்பட்டி**

செயலாளர்: ப. வெள்ளையப்பன், துணைச் செயலாளர்: கா. ஆவுடமுத்து, பொருளாளர்: பெ. ராமராஜீ, மாவட்டப் பிரதிநிதி மீ. தங்கம், செயற் குழுவினர் 11 பேர்.

**பாப்பம்பட்டி**

செயலாளர்: ஜி. எஸ்-பதி, துணை செயலாளர்: ஜி. சுப்புசாமி, பொருளாளர், மு. துரைசாமி, விளம்பரம்: சண்முகம்.

**க. வெள்ளாகுளம்**

செயலாளர்: எ. சதாசிவம், துணை செயலாளர்: ம. அ. இராமானுசம், பொருளாளர்: தி. அ. ராமசாமி, மாவட்டப்பிரதிநிதி: மு. பெருமாள்

**சின்னுளப்பட்டி**

செயலாளர்: பி. எஸ். ஆர். சவுடையா, துணைச்செயலாளர்: பி. டி. சம்பந்தம், பொருளார்: வி. தியாகராசன், மாவட்டப் பிரதிநிதி: எஸ். சேதுபதி, செயற்குழு: 17 பேர்.

**காமாட்சிபுரம்**

செய: வெ. ரத்தினம், துணைச் செய: ஏ. எஸ். மணி, பொரு: ஆ. விஸ்வாசம், மாவட்டப்: (விவரம் இல்லை) செயற்குழு: 6 பேர்.

**மேலசிந்தனைச்சேரி**

செய: நா. மு. காமராஜ், துணை: ப.கா.இராமசாமி, பொரு: பெ.இராமராசு, மாவட்ட: எஸ். பொன்னையா.

**நங்கவள்ளி**

செயற்: எ. கிருஷ்ணன், துணை: எம். இப்ராகிம், பொ: ஒ. கோவிந்தன், மாவட்: ஏ. கிருஷ்ணன், பெ. கிருஷ்ணன், நிர்வாகக்குழு 9 பேர்.

**குமரமங்கலம்**

செய: பி. முனியப்பன், துணை: செ. முனியப்பன், பொரு: அ-செங்கோடன், மாவட்: பி. ரங்கசாமி, செயற்குழு 15 பேர்.

**ஆத்தூர்**

செய: கே. நாராயணசாமி, துணை ஆர்-எஸ். மணி, பொரு: எஸ். சங்காலிங்கம், மாவட்ட: ஆர். எஸ். மணி, செயற்குழு 14 பேர்.

**துத்திக்குளம்**

செய: டி-ஏ. அண்ணுமலை, துணை: டி. பி. சுப்பராயன், பொரு: டி. ஏ. ரங்கசாமி, மாவட்: டி. என். சுப்ரமணியம், டி. எஸ். ராசு.

**நாமக்கல்**

செய: கே. பி. கந்தசாமி, துணை: எஸ். சின்னையா, பொரு: என். பி. செல்லப்பன், மாவட்: நா. பத்மநாபன், சு. ஆண்முத்து, செயற்குழு 16 பேர்.

**மைலம்பட்டி (தேஜூர்)**

செய: அ. கன்னையசாமி, துணை: பெ. அர்த்தனரி, பொரு: பெ-சுப்பராயன், மாவட்: சு. சொக்கப்பன், செயற்குழுவினர் 9 பேர்.

**வரும்பட்டி (வசந்தபுரம்)**

செய: வ. பெ. தங்கவேலு, துணை: வி. பி. பழனிசாமி, பொரு: வ. க. லிங்கப்பன், மாவட்: வ.பொ. தங்கவேலு, செயற்குழு 12 பேர்.

**இராமநாதபுரம் புதூர்**

செய: ஆர்-என். பழனிமுத்து, துணை: பி. வரதராஜ், பொரு: வி. ஆறுமுகம், மாவட்: ரா. வெங்கடாசலம், செயற்குழு 14 பேர்.

**ஆர். புதுப்பட்டி**

செய: பி-கே. முத்தசாமி, துணை: பி-என். பெரியசாமி, பொரு: ஆர். கருப்பண்ணன், மாவட்: கே. காளியப்பன், பி. சுப்ரமணியன். செயற்குழுவினர் 9 பேர்.

**அரூர்**

செய: எச். எல். முருகேசன், துணை: அப்துல்கபார், வேதகிரி, பொரு: சி. ஏ. சொக்கலிங்கம், மாவட்: எச். எல். பரசுராமன், சி. கே. செயராசு, செயற். 12 பேர்.



★

## "ஹிட்லரிசம்"

"ரஷ்யாவை ஒழித்தாலே சுபீட்சம் உண்டு"

"பொதுவுடைமைக் கொள்கை அபினி போன்றது"

"வலை வீசிப் பிடிக்கிறது ரஷ்யா"

இவ்விதம், ரஷ்ய நாடு குறித்து, அமெரிக்க ஏடுகளும் முதலாளிகளும் உறுமுவதை, உலகம் அறியும். அமெரிக்கா, முதலாளிகளின் நாடு! "ஆகவே, அவ்விதம் தான், பேசுவர்" என்று நம்மிலே பலர் கருதலாம். ஆனல் இதே வார்த்தைகளை இங்கேயுள்ளோரும் கூறும் போதுதான் நமக்கு ஆச்சரியமாகவும் திகைப்பாகவும் உளது! அண்மையில், காரைக்குடியில் பேசிய குமாரமங்கலம் கோமான் டாக்டர் பி. சுப்பராயன், 'பொதுவுடைமைக் கொள்கை அபினி போன்றது' என்று காரசாரமாகப் பேசினதாக, 'தினமணி' ஏடு, பிரமாதமாகத் தலைப்பிட்டு வெளியிட்டிருக்கிறது. ஒரு நல்ல கொள்கையின் அடிப்படையில் வளர்ந்து நிற்கும் ரஷ்யாவின் மீது இங்குள்ளோருக்கு சீற்றம் ஏற்படுவானேன்? வாய்க்கு வந்தபடியெல்லாம் பேசுவானேன்! இங்கேயுள்ள கம்யூனிஸ்டுகளின் போக்கு பிடிக்கவில்லை யென்றுல், உடனே தாக்கவேண்டிய இடம் 'மாஸ்கோ'தானு? பனைமரத்தில் தேள் கொட்ட தென்னமரத்தைப் போய் ஏன் வெட்டவேண்டும்! விவேகியின் செயலா இது? 'ரஷ்யா' மீது, சீறுகின்றனரே, அவர்களைக் குறித்து சர்வபள்ளி ராதாகிருஷ்ணன், பம்பாயில் ஆகஸ்டு 27ம் தேதி பேசியுள்ளார். அவர் கூறியதாவது:— "சர்வதேச அரசியல் போக்கு தற்போது ஹிட்லரிசத்தையே கைக் கொண்டிருக்கிறது. ரஷ்யாவை நசுக்கவேண்டும் என்று ஹிட்லர் பிரச்சாரம் செய்தார். அதற்காகவே வாழ்ந்து போராடி மாண்டார். தற்சமயம் ரஷ்யாவை அழிக்க வேண்டும் என்ற மேற்கத்தி நாடுகளின் கோஷ்டி ஒன்று முயற்சிக்கிறது. ஹிட்லரிசம் இன்னும் உயிரோடு இருக்கிறது என்பதைத் தானே இது காட்டுகிறது?"

ராதாகிருஷ்ணன், இந்தியத் துணைகண்டத்தின் துணைத்தலைவர். அவர், இவ்விதம் கூறியுள்ளார்! ஆனல் காங்கிரஸ் தலைவர்கள் ரஷ்யாவின் மீது, சீறுகிறார்கள்—பாய்கிறார்கள்!

★

"புலிநகம்" என்றபெயரால் சி. என். ஏ. "திராவிட நாடு" இதழில் தீட்டிய கட்டுரையொன்றை, "தமிழக வெளியீடு-75, வெங்கட்ராமபிள்ளை தெரு" என்ற பெயருடன், பிரசுரம் செய்யப்பட்டிருப்பதாக அறிய வந்தோம். இந்த நூலை அச்சியற்றித் தந்தோர் மீதும், வெளியிட்ட நபர் மீதும், வழக்குத் தொடர வழக்கறிஞரை அணுகியுள்ளோம். மேற்படி நூலை வெளியிட்ட நபர், இன்னும் சில கட்டுரைகளை, எமது அனுமதியின்றி நூலாக்க முயற்சித்துக் கொண்டிருப்பதாகவும் கேள்வியுற்றதால், இம்முடிவுக்கு வர நேர்ந்தது. வேண்டுமென்றே, எமது அனுமதியில்லாமல், செய்யப் படும் இம்மாதிரியான காரியங்களைப் பொது மக்களும்—கண்டிக்க வேண்டுகிறேம்.

திராவிட நாடு காரியாலயத்தார்.

**திருத்தம்**

காஞ்சி நகரசபைத் தேர்தலில் போட்டியிடும் நகரசீர்திருத்தக் கழக அபேட்சகர் பட்டியலை கடந்த வாரம் வெளியிட்டிருந்தோம். அதில், தவறுதலாக விடுபட்ட வார்டு28க்கு எ. பாலகிருஷ்ணமுதலியார் என்பதைச் சேர்த்துக்கொள்ள வேண்டுகிறேம். சே. கோ. பெருமாள் போட்டியிடும் வார்டு 27 என்று திருத்திக்கொள்ளவும்.

(ஆ-ர்)

## திராவிடநாடு பிரிவினை வாரம்

**17—9—52-லிருந்து 23—9—52 வரை.**

செப்டம்பர் திங்கள் 17ம் நாள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் துவக்க நாளாகும். மூன்று ஆண்டுகள் முடிந்து நான்காவது ஆண்டு துவங்கும் நிலையில் திராவிட முன்னேற்றக் கழகம் சீரும் சிறப்போடும் வளர்ந்தோங்கி வந்திருக்கிறது. 17—9—52ம் நாளிலிருந்து 23—9—52ம் நாள் முடிய உள்ள ஒரு வார காலத்தை, ஆண்டு விழாவும், பிரிவினை வாரமும் கொண்டாடுவதற்கேற்ற வாரமாகக் கொள்ளும்படி கிளைக் கழகங்களெல்லாம் கேட்டுக் கொள்ளப்படுகின்றன.

பொதுக் கூட்டம் கூட்டுதல், கொள்கை விளக்க அறிக்கைகள் வெளியிடுதல், ஊர்வலங்கள் நடத்தல், கொடியேற்றுவித்தல், கலை நிகழ்ச்சிகள் ஏற்படுத்தல் ஆகிய நிகழ்ச்சிகளில் ஏற்றவைகளைக் கொண்டு, பிரிவினை வாரத்தை கொண்டாட வேண்டுகிறேம்.

விழாக் கொண்டாடும் தோழர்கள் அமைதி குலையாமல், ஆர்வங்குறையாமல், ஒழுங்கு, கட்டுப்பாடு, உறுதி, ஊக்கம் ஆகிய பண்புகளை முறையோடு கையாண்டு, விழாவைச் சீரும் சிறப்புடனும், வெற்றிகரமாகவும் நடத்தும்படி வேண்டிக்கொள்கிறேம்.

இரா. நெடுஞ்செழியன்,
பொறுப்பாளர், தலைமை நிலையம்.



## அச்சுத் தொழிலாளரிடையே

சி. என். ஏ.

31—8—52 அன்று, காலை 9-மணிக்கு செண்ட்ரல் டாக்கீஸில் திருச்சிமாவட்ட அச்சுத் தொழிலாளர் 3-வது மாநாடும், தமிழ்நாடு அச்சுத் தொழிலாளர் கன்வென்ஷனும் தொடங்கி, வெகு சிறப்பாக நடந்தது.

தோழர் வி. சக்கரை அவர்கள், திறப்புரைக்குப் பிறகு, தோழர் தி. மு. ஆறுமுகம் தலைமை வகித்து தமது உரையை நிகழ்த்தினர்.

திருச்சி அச்சுத் தொழிலாளர் சங்கத் தலைவரும், தி. மு. க. செயலாளருமான தோழர் எம். எஸ். மணி, மாநாட்டிற்கு வந்திருந்த வாழ்த்துரைகளைப் படித்துக்காட்டினர்.

பிறகு கல்யாணசுந்தரம் அவர்கள் வாழ்த்துரை பகர்ந்தார். மலேயா சாம்பசிவம் மாநாட்டில் நிறைவேற்றப்படவேண்டிய தீர்மானங்களை எடுத்து விளக்கினர். இறுதியாக சி. என். ஏ. அவர்கள் பேசினர்கள். அவர் பேசுகையில், அச்சுத் தொழிலாளருடைய குறைகள் அத்தனையும் போகவேண்டுமென்றுல், அச்சுத் தொழில் வளரவேண்டும், அச்சுத் தொழில் வளரவேண்டுமென்றுல், நாட்டில் கல்வி பெருகவேண்டும், கல்வி பெருக வேண்டுமென்றுல், கல்வியறிவை வளர்க்க வேண்டும் என்ற எண்ணமுள்ள சர்க்கார் வேண்டும். ஆனல், துரதிருஷ்டவசமாக நமக்குள்ள சர்க்கார் கல்வித் துறையிலே கவலை செலுத்தவில்லை. 100-க்கு 12 பேர் படித்துள்ள இந்த நாட்டில் கல்விபெருக்கம் எவ்வளவு வேகமாகச் செய்யப்படவேண்டும் என்று எண்ணிப் பாருங்கள். சர்க்காரின் போக்கு, இந்த விஷயத்தில் எவ்வளவு விபரீதமாக இருக்கிறது என்றும் எண்ணிப் பாருங்கள். சேலத்தில் பேசிய கவர்னர் பிரகாசா யாரும் அதிகம் படிக்காதீர்கள் — இப்பொழுது படித்துள்ளவர்களுக்கே வேலை கிடைக்கவில்லை. வேலையில்லா திண்டாட்டம் அதிகமாக இருக்கிறது. மேலும் படித்தால் நிலைமை என்ன ஆவது என்று குறிப்பிட்டார். இவர் நமக்கு கவர்னர். இவருக்குப் பெயர் பிரகாசா— ஆனல் இருட்டுக் கொள்கையைப் பேசுகிருர்! தொழிலாளர் மாநாடு என்றுல், தொழிலாளருடையகுறைகளைமட்டும் கூறவில்லை. அச்சுத் தொழில் வளரவே வழிகாட்டுகிருர்கள். அந்த முறைகளில் அச்சுத் தொழில் வளர்ந்து அதிக லாபம் வந்து, தொழிலாளருடைய குறைகள் நீங்கும். மேலும் அவர் பேசுகையில் முற்போக்கு சக்திகள் ஒன்றுபடவேண்டியதின் அவசியத்தையும், அப்படி ஒன்றுபட, ஒன்றுபடத்தான், மக்களிடையே மகிழ்ச்சியும், மக்களை ஆட்டிப்படைக்கும் மமதைகொண்ட சர்க்காருக்குமருட்சியும் ஏற்படும் என்றும், தொழிலாளர் இயக்கங்கள், இத்தகைய கூட்டு முயற்சியில் பணியாற்றவேண்டும் என்றும், திராவிட முன்னேற்றக் கழகம், தனக்குள்ள சக்தியை, இம்மாதிரி தொழிலாளர் துயர் துடைக்கும் பிரச்சினைகளில், என்றும் பயன்படுத்தத் தயார் என்றும் குறிப்பிட்டார்.

மாநாடு முடிந்ததும், மாநாட்டு நிர்வாகிகள், சி. என். ஏ. வுடன் புகைப்படம் எடுத்துக்கொண்டனர். பகல் 1-30க்கு மாநாடு முடிந்தது.

அச்சுத் தொழிலாளர் மாநாட்டிற்கு காஞ்சியிலிருந்து தோழர்கள் தில்லை- வில்லாளன், சி. வி. இராசகோபால், புட்டாசாமி ஆகியோர் உடன்வரச்சென்றிருந்தார். மாநாடு முடிந்ததும் திருச்சி 'திராவிடப் பண்ணை'யில் மதியம் உணவுஉண்டு, அங்கேயே தங்கியிருந்தார்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

எப்படிப் பொங்கி வழிந்தன ஆத்திரக் குமுறல்கள்! இப்போது, நமது முரசத்தை அவர் கை அடிக்கிறது!!

"தென்னிந்தியாவின் திராவிட மொழிகளுக்கான இலக்கியக் கழகம்" ஒன்று வேண்டும் கூறுவதால், தோழர் கோதண்டராமனும் மித்திரன் இதழும், 'திராவிடநாடு' கோரிக்கையை ஏற்றுக்கொண்டு விட்டார்கள் என்று, பேதலித்துப் பேசும், பித்துமனங் கொண்டோரல்ல நாம். அவர்கள் பாரதப் பிரியர்கள்தாம்! எனினும், அவர்கள் முன்பு இருந்த நிலை என்ன? இப்போது பேசுவது எவ்விதம்!!— இதையே சுட்டிக்காட்ட விரும்புகிறேம். தொடவும் கூசியோர்களாயிற்றே! 'ஏது ஆரியமும் திராவிடமும்' என்று, பேசியோராயிற்றே! அவர்கள் இதழில், திராவிடப் புராதனப் பண்பாட்டின், குறிப்புகள் வெளிவருகின்றன. இது சாதாரணசம்பவமா! வெறுத்தும் பழித்தும் பேசியோர் இன்று வலியுறுத்தியும் வாதாடவும் பேச முன்வருவதென்றுல்? நாம் எது சொன்னாலும் அதை மறுப்பதே பிறவியெடுத்ததன் பெரும் பயனெனக்கருதிக் கிடந்தோர் இன்று மறுக்காமல் ஏற்றுப் பேசுவதென்பது எளிதான காட்சியா! இன்பம் தரக்கூடாத சங்கதியா!!

இந்த 'அருணேதயம்' கண்டு, நாம் மகிழ்கிறேம். திராவிடம் உடனே பிரிந்துவிடும் என்பதால் அல்ல; இருட்குகையில் ஒளி வீசுகிறது என்பதால். முரட்டுத்தனமும், வரட்டு வாதமும் நீங்குகிறதென்பதால்- "திராவிடம்", "திராவிட மொழி" என்றுல் யார் சீறினரோ அவர்களிடையில். இந்த மனமாற்றம் அரும்புகிறது. இது உணர்த்துவது அவர்களது திமிராதிக்கம் சரிந்துவிட்டதென்பதை அல்ல. அது, திடீரென ஏற்பட்டுவிடக்கூடியகாரியமுமல்ல! ஆனாலும், மகிழ்கிறேம் — நம்மைத் தாக்கிய பாணங்களில் ஒன்று ஒடிந்தது, என்பதால். திராவிட கலாச்சாரம் என்பதை தேசிய இதழ்கள் ஒத்துக்கொள்வதும், திராவிட இனமொழிகள் என்று வெளிப்படையாகக் கூறுவதும், அவைகளுக்காக தென்னிந்திய இலக்கிய அகாடமிவேண்டுமெனக் கோருவதும் அல்ப விஷயங்களல்ல. அவர்கள் கோருவதென் னிந்திய இலக்கிய அகாடமி! திராவிட மொழிகளின் உறவுக்கும் வளர்ச்சிக்கும் 'இந்தக் கூட்டுக் கழகம் தேவை'யென்கிருர் கட்டுரையாளர்! இதே உறவையும் வளர்ச்சியையும் அடிப்படையாகக்கொண்டே. நாம் கூட்டாட்சி கோருகிறேம். தேசிய இதழார் விரும்புவது கூட்டுக் கழகம்! நாம் விரும்புவது கூட்டாட்சி!! தேசிய எழுத்தாளர் விரும்புவது பாரதநாட்டின் எல்லா மொழிகளுக்கும் இலக்கிய அகாடமி வேண்டும் — அதேபோல தென்னிந்திய மொழிகளுக்கும் வேண்டும் என்பது. அகண்டபாரத ஆசையை இழக்காமல்தான் அவர்கோருகிருர், இதனை! எனினும், அந்தக் கோரிக்கையில், வீசும் 'கூட்டுமுயற்சி'யினை நாம் மறக்கஇயலாது. கூட்டுமுயற்சி வேறு! ஐக்கிய முயற்சி வேறு!! தோழர் குறிப்பிடுவது திராவிட இனமொழிகளுக்குள், பரஸ்பர நல்லெண்ணமும் ஒத்துழைப்பும் கொண்ட கூட்டுமுயற்சி. இந்த எண்ணம் திராவிடமொழிகள் என்கிற அடிப்படையில் எழுந்திருப்பதைத்தான், அருணேதயம், எனக் குறிப்பிடுகிறேம், "ஆகுமா, முடியுமா, திராவிடக்கூட்டாட்சி" எனக் கூறுவோர் சிந்தனையில் இச்சிறுபொறிபடவேண்டும்! எள்ளிப் பேசினேர், இவ்விதம் கூறுகிருர்கள். 'இந்தியா ஒருநாடு' என்று ஜபித்துக்கொண்டே, திராவிட மொழிகளின் கூட்டுக்கழகம், கோருகிருர்கள்! மொழித்துறையில் வளர, வாழ, இந்த அகாடமி! அரசியலிலும் வாழ்வியலிலும் சிறந்து விளங்க? அந்த நெருக்கடி ஏற்படும்போது, எத்தகைய பதில் தேவைப்படும்? திராவிடநாடு திராவிடருக்கே! — என்பது தவிர வேறென்ன!!

★

## வேதனைக் குரல்

இந்திய சர்க்கார் இரும்பு ஆலை நிர்மாணிக்கும்.

80 கோடி ரூபாயில் திட்டம்

வெளிநாட்டு உதவியுண்டு

*

ஜப்பான் தொழில் நுணுக்க அதிபர்கள் இன்று டில்லி சேர்ந்தார்கள்.

*

ஜெர்மனி நிபுணர்கள் இங்கு வரலாமென கருதப்படுகிறது

*

அமெரிக்க சர்க்காரின் தூதுவர், சர்க்காரின் கம்யூனிடிதிட்டம் குறித்து ஆலோசனை நடத்தினர்

*

இவ்விதம், செய்திகளைக் கேள்வியுறுகிறேம், அடிக்கடி! "வரண்ட பாலைவனம் போலிருக்கும் இந்திய உபகண்டத்தின் மீது அமெரிக்கருக்கும், ஜப்பானியருக்கும், ஜெர்மானியருக்கும் எவ்வளவு அன்பு வந்திருக்கிறது! பாலையைச் சோலையாக்க வந்து குவிகிருர்களே!" என்று கருதக்கூட நேரலாம். அந்த அளவுக்கு, இந்தச் செய்திகளை, முகஸியம் தந்து தேசிய இதழ்கள் பிரசுரம் செய்கின்றன. ஆலைவளம் இல்லா நாட்டில் ஆலைகளை ஏராளமாக அமைத்துத்தருவதில் ஏனிந்த நாடுகளுக்கு அக்கரை ஏற்பட்டிருக்கிறது எனபதைப பலா எண்ணுவதில்லை! முன்பெல்லாம், அமெரிக்காவின் தலையீடு மட்டுமே இருக்கிறது எனறு கூறி வந்த நமக்கு ஜெர்மனியும், ஜப்பானும் இங்கே 'கூடாரம்' அடிக்க வருவதாகக் கேள்வியுறும். செய்திகளைக் கேட்கும்போது திகைப்பாயிருக்கிறது! ஜெர்மனியும் ஜப்பானும் தோற்ற நாடுகள்—அவை நமக்கு உதவுவதாமே? என்கிற சந்தேகம் எழும்போதுதான், அந்த நாடுகளின்மூலம் வரும் உதவியின் உண்மைச் சொரூபம் வெளியாகும். அமெரிக்காவுக்குக் கட்டுபபட்ட ஜப்பானும், ஜெர்மன் பகுதியும் தான் இந்த உதவிகளைத் தர வருகிறது! அதாவது. அவைகளின் மறைவில், அமெரிக்காவே பலபல வழிகளில் இந்திய மண்ணில் 'கூடாரம்' அடிக்கிறது. உதவியெனும் பெயரால் ஏராளமான உத்யோகஸ்தர்களைக் கொண்டுவந்து குவிக்கிறது. விடுதலைப் பெற்ற எந்த நாடும் இந்த விபரீத உதவியை ஏற்பது, விஷத்தைக் கொஞ்சுவதுபோலாகும்! இந்த "உண்மை"யை, சமீபத்தில் தோழர் குமரப்பா தெளிவுபடுத்தியுள்ளார். பழுத்த காங்கிரஸ்வாதி அவர்:—

சுயமரியாதையும், சுதந்திரப் பற்றும் கொண்ட எவரும் இந்த உதவியை ஏற்க முடியாது. உதவியென்கிற பெயரால் பிற நாட்டினர் இங்கே வாழ, வழிசெய்துதருகிறது. ரூபாய்க்கு 2 அணு உதவியென்ற பெயரால் அளிக்கும் அமெரிக்கா 'கம்யூனிடி திட்டத்தில்' ஆதிக்கக்குரல் வகிப்பது ஏன்? இந்தத் திட்டம் நிலப் புரட்சிக்கு எதிராக, அமெரிக்கத் தூண்டுதலின் பேரில் செய்யப்படும் கண்துடைப்பாகும், அமெரிக்காவின் ராஜதந்திர மூளை தயாரிக்கும்; இந்த ஏற்பாடுகளை, இந்தியா ஏற்பது ஆபத்தானது. கொரியாவின் நிலைமைக்கே நம்மைக் கொண்டுவிடும். அமெரிக்கா, ரஷ்யாவை எதிர்த்துச் செய்யும் கூர்மைமிக்க வாளாக நாம் ஆகி வருகிறேம். பிரிட்டிஷ்காரன் வெளியேறிசென்றசூழ்நிலையை அமெரிக்க பணதிபத்யக்காரர்கள் பயன் படுத்திக் கொள்ள முயலுகிருர்கள்" என்று வேதனையோடு வெளியிட்டிருக்கிருர்- உலக அரங்கில் பணதிபத்யம் செய்துவரும் கடைசி சாகசம் இது என்று வேதனையோடு கூறுகிருர், குமரப்பா! ஆனல், எங்கே அதை உணருகிருர்கள், காங்கிரஸ் தலைவர்கள்!!

❀

## மாஜி ராணுவத்தாரும் தி. மு. க. பொதுச் செயலாளரும்

17—8—52-ல் பொன்மலையில் தோழர் ஸ்ரீகண்டன்நாயர் தலைமையில் நடந்த மாஜி ராணுவத்தார் மாநாட்டில் கனம் டாக்டர் கிருஷ்ணராவ், அனந்தன் நம்பியார், சி. என். அண்ணுதுரை ஆகியோர் கலந்துகொண்டனர்.

அன்று மாலை 5-மணியளவில் சி. என். ஏ. சொற்பொழிவு நிகழ்த்தினர். அவர் பேசுகையில், சென்ற உலக யுத்தத்தின் பொழுது, பட்டாளத்திற்கு ஆள் சேராதே, பாங்கியில் பணம் போடாதே என்று பேசிய காங்கிரஸ். கட்சியைவிட, திராவிட இயக்கத்தாருக்குத்தான் மாஜி ராணுவத்தினர் விஷயத்திலே அதிக அக்கரை இருக்கமுடியும். ஏனெனில், பட்டாளத்தில் நம் திராவிடக் காளைகள் பல்லாயிரக் கணக்கில் சேரவும், அதனல் பாசிசம் உலகை விட்டொழியவும் நம் இயக்கம் வழிவகுத்துக் கொடுத்தது. யுத்தத்தில் நாம் ஒத்துழைத்தது காரணமாகவே, இந்திய சுதந்திரம் மலர்ந்தது. ஆனல் அந்த வீரர்கள் இன்று வீணர்களாய் உலவுகிருர்கள். வேலையில்லா—திண்டாட்டத்தால் வேதனைப்படுகிருர்கள். காக்கியுடைதரித்து, களத்தில், கையில் துப்பாக்கியுடன், நெஞ்சில் உறுதியுடன் நடந்தவர்கள் இன்று கந்தலுடையணிந்து, வேலை காலி இருக்கிறதா என்று வீதிக்கு வீதி யலைகிருர்கள். சர்க்கார் இவர்களின் துயர் துடைக்க முன்வரவேண்டும். இன்றேல், மாஜிபட்டாளத்தார், தாங்கள் பெற்ற பயிற்சியை பயன்படுத்த ஆரம்பித்தால் நிலைமை என்னவாகும் என்று எண்ணிப்பாருங்கள். துப்பாக்கி ஏந்தியிருந்தவர்கள் ஒரு காலத்தில் இன்று துரைத்தனத்தாரின் கவனத்தில் கூட வர முடியாதவர்களாகிவிட்டார்கள். மறுபடியும் அவர்கள் துப்பாக்கியேந்தி நடந்தால் — நாட்டின் நிலையைப் பற்றி யோசியுங்கள். என்னைப் பொறுத்த அளவில் எனக்கு அதிகாரமும், வாய்ப்பும் இருந்தால் திராவிடநாடு விடுதலைப் பட்டாளத்திலே இந்த வீரர்களைச் சேர்த்துக் கொள்வேன். சர்க்கார், மாஜிபட்டாளத்தார் விஷயத்திலே காலங் கடத்தலோ, தள்ளிவைத்தலோ கூடாது. அவர்கள் பிரச்சினை, பயங்கரமாக மாறிவிடக்கூடும் என்றும், இன்னும், கருத்துரைகள் பல எடுத்துரைத்தார்.

தோழர் சி. என். ஏ. அவர்கள், தோழர்கள் தில்லை—வில்லாளன், பாங்குசம் ஆகியோர் உடன்வர, மாநாட்டிற்குச் சென்று, நிகழ்ச்சியில் கலந்துகொண்டு, மீண்டும் திருச்சிவந்து சேர்ந்தார்கள். மதுரையிலிருந்து தோழர்கள் அ. பொன்னம்பலனர், எஸ். முத்து ஆகியோர் வந்திருந்து கலந்து பேசியிருந்தனர். அன்று இரவே, இரயில் மூலம், தோழர் எஸ். வி. லிங்கம் உடன், சி. என். ஏ. காஞ்சிக்கு புறப்பட்டு வந்து சேர்ந்தார்கள்.

# "டால்மியாபுரம்"—பெயர் மாற்றப் போராடுவோம்!

## திருச்சி தீரர்களுடன் சி. என். ஏ.

### குதூகலமான காட்சி

திருச்சி மாவட்ட தி. மு. கழகப் பணியாளர்கள் கூட்டம், 31-8-52 மாலை 3 மணிக்கு, திருச்சியில், இலேகார் தெருவில் அமைந்திருக்கும் திருச்சி மாவட்டக் கழக மனையின் மாடியில், பொதுச்செயலாளர் சி. என். ஏ. தலைமையில் நடந்தது. தோழர்கள் தில்லை-வில்லாளன், சங்கரன், பராங்குசம், மணி, 'திராவிடப்பண்ணை' முத்துகிருஷ்ணன் ஆகியோர் கூட்ட நடவடிக்கைகள் வெற்றிகரமாக நடக்கும்படி உடன் இருந்து காரியமாற்றினர்.

பணியாளர் கூட்டத்திற்கு வந்திருந்த தோழர்கள், அவர்கள் சார்ந்துள்ள கிளைகள் விபரம் கீழே தரப் பட்டுள்ளது.

தாத்தையங்கார்பேட்டை தி.மு. க. கிளை. கு. பழனியப்பன் செயலாளர். டி. பெருமாள் பொருளாளர். மாவட்டப் பிரதிநிதி. மு. பெ. முத்துக்கருப்பன். செயற்குழு மெம்பர் அங்கப்பன். இ. பரசுராமன் செயற்குழு உறுப்பினர்.

குளித்தலை தி. மு. க. கிளை. இரா. இராஜா செயலாளர். தி.கி. முத்துக் கிருட்டிணன் துணைச் செயலாளர். இரா. இராமச்சந்திரன் பொருளாளர். எல்லையன். நிர்வாகக்குழுஉறுப்பினர்.

லப்பைக்குடி தி. மு. க. கிளை. அப்துல்கைமது மாவட்டப் பிரதிநிதி. கபூர் துணைச் செயலாளர்.

சந்நியாசிநல்லூர் தி. மு. க. கிளை. இரா. கிருட்டிணசாமி. செயலாளர்.

பூவாலூர் தி. மு. க. கிளை. பி. சி. சேது செயலாளர்.

துறையூர் தி.மு.க. கிளை. டி. எஸ். கோவிந்தன் துணைச் செயலாளர் அழகிரி. மாவட்டப் பிரதிநிதி பி. கிருட்டினன். எம். துரையரசன் செயற்குழு உறுப்பினர்

கோட்டாத்தூர் தி. மு. க. கிளை. தெ. செகந்நாதன் செயலாளர். அ. அருணாசலம் மாவட்டப் பிரதிநிதி அ. துரைசாமி செயற்குழு உறுப்பினர்.

பொன்னமராவதி தி.மு. க. கிளை நல்லசுப்பையா. துணைச் செயலாளர் ஏகாம்பரம் பொருளாளர் எம். எம். நடராசன் மாவட்டப் பிரதிநிதி.

ஒக்கரை தி. மு. க. கிளை. எஸ். பி. இராமலிங்கம் செயலாளர் எஸ். இராசு துணைச் செயலாளர் எஸ். பி. நடேசன் பொருளாளர். ஆர்.சின்னசாமி மாவட்டப் பிரதிநிதி.

வெங்கடாசலபுரம் தி.மு.க. கிளை. வி. என். அரங்கராசன் செயலாளர்.

புதுக்கோட்டை தி. மு. க. கிளை தி. மகேந்திரன் செயலாளர். மாவட்டப் பிரதிநிதி.

அரிமளம் தி. மு. க. கிளை. வெ. முத்துவீரப்பன் செயலாளர்.

வெல்லனூர் தி. மு க. கிளை. வே. முத்தமிழ்ச்செல்வன் செயலாளர். வெ. ந. நடராசன் துணைச் செயலாளர். ம. முருகேசன் மாவட்டப் பிரதிநிதி.

சோமரசம்பேட்டை தி. மு. க. கிளை வி. எம். கணேசன் செயலாளர் எ. மருதமுத்து பொருளாளர்.

காட்டுப்புத்தூர் தி. மு. க. கிளை. கே.எ-இராசமாணிக்கம்செயலாளர். கே. என். கோவிந்தராசன் துணைச் செயலாளர்.

மணப்பாரை தி. மு. க. கிளை. எ. கணபதி துணைச் செயலாளர் என். கோதண்டராமன் மாவட்டப் பிரதிநிதி.

பொன்மலை தி. மு. க. கிளை. எம். மாணிக்கம் மாவட்டப்பிரதிநிதி. எஸ். காளிமுத்து செயலாளர் என். துரைராசன்

உறையூர் தி.மு.க. கிளை. ஆர். இராமு, டி. ஆர். கோவிந்தராசன் உறுப்பினர்கள்

சீரங்கம் எம். இராமநாதன் பொருளாளர்.

தொண்டைமான் நல்லூர் தி. மு. க. ஐ. சபாஸ்டி செயலாளர் எம். பி. முத்தையா துணைச் செயலாளர். மேலப்பழுவூர் எம். ஆர். செல்லப்பன், எ.ஆர். இரத்தினம் மாவட்டப் பிரதிநிதி டி. வி. கே. சுந்தரராசன் செயலாளர். ஆர். செல்லமுத்து துணைச்செயலாளர். ஆர். சுந்தரராமன் பொருளாளர்.

தொட்டியம் எஸ். மருதநாயகம் செயலாளர் எம். எ. கணேசன். மருதநாயகம் மாவட்டப் பிரதிநிதிகள் திருவானைக்காவல் சி. வடிவேல் செயலாளர்.

குளக்குடி தி. மு. க. கிளை. து. அன்புமணி துணைச் செயலாளர் அரங்கராசன் செயற்குழு உறுப்பினர்

கீழப்பழுவூர் தி. மு. க. கிளை. பி. இராமுலு மாவட்டப் பிரதிநிதி கே. நாகராசன் துணைச்செயலாளர் து. இரத்தினம் பொருளாளர்

மலைக்கோட்டை நகர தி. மு. க. கிளை டி. எம். இரத்தினம் துணைச் செயலாளர்.

தி. மு. க, கிளை எச். செல்வராசன் மாவட்ட பிரதிநிதி.

அரியலூர் தி. மு. க. கிளை மாரிமுத்து செயலாளர், சின்னையன் பொருளாளர்

தாரா நல்லூர் தி. மு. க. கிளை எஸ். சுப்ரமணியம் செயலாளர் என். கோவிந்தன் பொருளாளர்

உரையூர் தி. மு. க. கிளை எம். எஸ். சொக்கலிங்கம் செயலாளர் ஜி. என். சுப்ரமணியன் குழு, உறுப்பினர்கள் ஆர். அரங்கநாதன், எம். கிருட்டினமூர்த்தி

லால்குடி தி. மு. க. கிளை வி. பி. பரமசிவம் செயலாளர் இரா. சிவப்பிரகாசம் துணைச்செயலாளர்

தவுட்டுப்பாளையம் தி. மு. க. கிளை டி. பி. மூர்த்தி செயலாளர்

சோபனபுரம் பத்மநாபன் செயலாளர் நல்லப்பன் மாவட்டப் பிரதிநிதி

திருச்சி நகர கிளை எம். எஸ். மணி செயலாளர் எஸ். அருணகிரி துணை செயலாளர்

வையம்பட்டி என் சண்முகம்

திருச்சி வடபகுதி ரா. பொன்ரங்கம் செயலாளர் பொன்னையன் துணைசெயலாளர் ரெங்கராசன் பொருளாளர்

*

அந்த மாடியில் இடம் நெருக்கடியாகிவிடவே, பல தோழர்கள் உள்ளே வரமுடியாமல், வெளியில் நிற்கவேண்டியதாகிவிட்டது. கழக நிர்வாகிகள்மட்டுமின்றி, பல ஊர்களிலிருந்து, கழகத் தோழர்கள் பலர் ஆர்வத்துடன் வந்திருந்தனர்.

கூட்ட ஆரம்பத்தில், பராங்குசம், புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள நிர்வாகிகளை வரவேற்றும, அறிமுகப்படுத்தியும் பேசினர். பிறகு, ஒவ்வொரு கிளையைச் சார்ந்த செயலாளர் ஒவ்வொருவரும் தங்களூர் நிலைமைகளையும், கழக வளர்ச்சிக்கான காரியங்களையும் எடுத்துரைத்தார்கள். தங்கள் ஊரில் உறுப்பினர் எவ்வளவு, ஏன் அதிகம் சேர்க்க முடியவில்லை, நடத்திய கூட்டங்கள் எத்தனை, நடைபெற்ற வேறுநிகழ்ச்சிகள் என்னென்ன என்று தெளிவாக விளக்கிய நிகழ்ச்சி, நம் இயக்க சரித்திரத்தில் ஜனநாயக மலர் மலர்ந்து மணம் வீசுகிறதை குறிப்பிட்டது.

செயலாளர்களின் பேச்சுக்களை மிக உன்னிப்பாகக் கேட்டுக்கொண்டிருந்தார் பொதுச் செயலாளர். இடையிடையே, ஏற்பட்ட சந்தேகங்களுக்கும், கேள்விகளுக்கும் அப்பப்பொழுது தெளிவுரை தந்தார். தேர்தலில் சில இடங்களில் ஏற்பட்ட சிக்கல்களைப்பற்றியும், சட்ட திட்டத்தில்வந்த சந்தேகத்தைப்பற்றியும், விளக்கினர்.

கடைசியாக பொதுச்செயலாளர், கழகப் பணியாளர்களை வரவேற்றும், பாராட்டியும், ஒருமணிநேரம் பேசினர். அவர் பேசுகையில், கழகத்தில் உள்ள தோழர்களிடையே கட்டுப்பாடும், நேசமனப்பான்மையும் வளரவேண்டும் என்றும், போட்டி எண்ணமும், பொறுமையுணர்ச்சியும் ஏற்படக்கூடாது, ஒருவரையொருவர் குறைகூறிக்கொண்டு திரிவது கழக வளர்ச்சியாகாது. கழகப் பணியாளர்களுக்குப் போட்டிவர வேண்டும். ஆனால் அது பொல்லாங்கு பேசுவதாக அமையக் கூடாது. 'இதோ அவர் எட்டுக் கூட்டங்கள் நடத்தினர், நான் பன்னிரண்டு கூட்டங்கள் நடத்திக் காட்டுகிறேன். அவரால் முந்நூறு உறுப்பினர்களே சேர்க்கமுடிந்தது, என்னால் ஐந்நூறு உறுப்பினர்கள் சேர்ககமுடிந்தது' என்ற இப்படி போட்டி வரவேண்டும். புறங்கூறித் திரிவது கூடாது. கழகக் கட்டு உடையும்படி, பணியாளர் எவரும் நடக்கக்கூடாது. சட்டத்திட்டத்தின்படி, சங்கடங்கள் விளைவிக்க மட்டும், தங்கள் சக்தியை உபயோகிக்கக்கூடாது. கழகம் வளரவே தங்கள் உழைப்பை அர்ப்பணிக்க வேண்டும் நம்மை எதிர்ப்பவர்கள் ஏராளம். நம் திட்டத்தைக் குறைகூறுவோர் அதிகம்— ஆகவேதான் நாம் ஒரு குடும்பம்போல, உறவு மனப்பான்மையுடன் கட்சியில் காரியமாற்றவேண்டும். நம் இலட்சியம் பெரிது — நம் பணியாளர் தொகை வளரவேண்டும். அவர்கள் தொண்டு சிறக்கவேண்டும். என்று குறிப்பிட்டார். அவர் பேச்சின் இறுதியில் திருச்சிமாவட்ட தி. மு. கழகம், திருச்சி மாவட்டத்தில், ஒரு வடநாட்டு முதலாளியின் பெயரால் உள்ள டால்மியாபுரத்தின் பெயரை மாற்றிக்கிளர்ச்சிதொடங்க வேண்டும் என்றும், மாவட்டப்பணியாளர்கள் முழுமூச்சாக வேலை செய்யவேண்டும் என்றும் குறிப்பிட்டார். திராவிடத்திற்கே ஒரு அவமானச் சின்னமாக இருக்கிறது அந்த டால்மியாபுரம். அதன் இயற்பெயரான கல்லலூர் என்று மாற்றும்படிக் கிளர்ச்சி நடத்தவேண்டும். என்றும், தி. மு. கழகம் மூன்றுண்டுகாலத்திற்குள், இவ்வளவு பெரிய அளவில் வளர்ச்சி அடைந்ததற்குக் காரணம், கழகப் பணியாளர்கள்தான் — அவர்கள் ஒத்துழைப்பும், ஊக்குவிப்பும்தான் என்றுகூறி அவர்களுக்கு எல்லாம் தமது நன்றியறிதலைத் தெரிவித்துக்கொண்டார்.

கூட்டம் முடிந்ததும், காரில் உடன் காஞ்சிக்கு புறப்பட்டுச் சென்றார்.

★

## கருப்புக்கொடி.

திருத்தணி

அரக்கோணம்

காவேரிப்பாக்கம்

ஆகிய இடங்களில், கடந்தவாரம் மக்கள் நம்பிக்கையை உதறித் தள்ளிய மந்திரி மாணிக்கவேலுக்கும் உதவி சபாநாயகர் அரக்கோணம் பக்தவச்சலுக்கும், கருப்புக் கொடிகாட்டிகண்டனம் தெரிவிக்கப்பட்டது. அந்தந்த இடத்து கிளைக் கழகத் தோழர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட இந்தக் கருப்புக்கொடி நிகழ்ச்சியில் ஏராளமான கழகத்தோழர்களும் பொதுமக்களும் கலந்துகொண்டனர்.

## சி. என். ஏ.
## சுற்றுப் பிரயாணம்

செப்.

7 காஞ்சி (பச்சையப்பன் கல்லூரி)

12 சென்னை (திருமணம்)

13 பொன்மலை

14 கும்பகோணம்

21 மதுரை

23 திருச்சி

27 ஆத்தூர்

28 கள்ளக்குறிச்சி

## ★ தீப்பொறி ★

நமது கழக வீரர் வேலூர் சி. பி. சிற்றரசு அவர்களை அறியாதார் இருக்கமுடியாது. கனல் கக்கப் பேசும் அவரது வேகத்தை, எழுத்துமூலமும் காணும் சந்தர்ப்பத்தை, திருச்சியிலிருந்து வெளிவரும், 'தீப்பொறி' இதழ், வழங்குகிறது. அரசியல் கட்டுரைகளும், அறிவியல் குறிப்புகளும் தாங்கி வெளிவரும், 'தீப்பொறி'யினை வாழ்த்தி வரவேற்கிறோம். திக்கெட்டும் பரவிவரும் நமது கொள்கைகளைக் கட்டிக் காக்கவும், விளக்கி வளர்க்கவும், ஏடுகள் இல்லை என்கிற பெருங்குறை விரிந்துகிடக்கும் நேரத்தில், முக்கிய நகரங்களை மையங்களாகக் கொண்டு, இது போன்ற அறிவேடுகள் வருவது, மிக மிக மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். 'தீப்பொறி' கிளம்ப ஒத்துழைக்கும் அனைவருக்கும், தோழர் சிற்றரசு அவர்களுக்கும் நமது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். விலை 0—2—0.

"தீப்பொறி"

தெப்பக்குளம் திருச்சி.

## நமது புதிய ஏஜண்ட்

1—9—52 முதல் சென்னைக்கு தோழர் C. S. கன்னையாவை நம் 'திராவிடநாடு' இதழுக்கு ஏஜண்டாக நியமித்துள்ளோம்என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம். இதழ் வேண்டுபவர்கள் கீழ்க்குறிப்பிட்ட முகவரியில் பெற்றுக்கொள்ளலாம்.

C. S. கன்னையா,

42, அவதானம்பாப்பையர் தெரு,

சூளை, வேப்பேரி போஸ்ட்,

மதருஸ்—7.

Edited Printed & Published by C. N. Annadurai M. A., at "Dravida Nadu" Press, 95, Tirukkachinambi St., Kancheepuram.

